உ

கணபதிதுணை.

# அருணகிரியந்தாதி.

தெய்வத்தன்மைவிளங்கிய

குகைநமசிவாயதேவர்

அருளிச்செய்தமூலமும்,

களத்தூர்

வேதகிரிமுதலியார்குமாரர்

ஆறுமுகமுதலியாரால்

செய்த பொழிப்புரையும்,

இஃது

புரசைப்பாக்கம்

ஏழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சித்திரபானுஸு.





சிவமயம்.

# அருணகிரியந்தாதி.

## மூலமும் - உரையும்

---

### காப்பு.

### விநாயகர்துதி.

சித்திதரும்புத்திதருஞ் செந்திருவைச்சேர்விக்கும்
பத்திதருமெய்ஞ்ஞானம பாலிக்குங்-கொத்தி
யரிமுகனைக்காய்ந்த வருணேசர்தந்த
கரிமுகனைக்கைதொழுதக் கால்.

### இதன்பொருள்.

ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் இரணியசம்மார நிமித்தம் கற்றூணில் நரசிங்கமாயுதித்து அவ்விராக்ஷதனுடைய மார்பைப்பிளந்து உதிரத்தைக்குடித்ததால் வெறிகொண்டுலோகா லோகங்களையெல்லாம் அதம்பண்ணயத்தனித்தகாலத்தில் சார்த்தூலபட்சியாய் அவதாரஞ் செய்துநரசிங்கத்தைப்பிளந்து வைகுந்தத்துக் கனுப்பிய அருணசலஈசுரர் புத்திராகியயானை முகத்தையுடைய விநாயகக்கடவுளைத் தொழுதவர்களுக்குகா

ரியசித்தியும். நல்லபுத்தியும்,இலட்சுமிகடாட்சமும், தெய்வ பக்தியும், மெஞ்ஞானமும்உண்டாம்என்றவாறு.

கார்கொண்டமேனியனுங் கஞ்சனுங்காணுப்பெருமை
யார்கொண்டுரைசெய்வா ரம்புவியிற் - சீர்கொண்
டருணகிரிமேவுகின்ற வையாநீவேண்டிக்
கருணைபுரியாதிருந்தக்கால்.

இதன்பொருள்.

மேகம்போன்றதிரேகத்தையுடைய மகாவிஷ்ணுவும்,தாமரைமலரி லுதித்தபிரமதேவனும், காணுதற்கரியஉமதுபெருமையைஇப்பூமியின் கண்ணுள்ளவர்களில் யார்அறிந்து துதிக்கவல்லவர்கள் கைலையையொத் ததிருவண்ணுமலையில் எழுந்தருளிய ஐயனேநீர்கிருபைசெய்யாவிடில்- என்றவாறு (க)

காலைமலர் தூவக் கருத்தறியாநாயேற்கு
வேலைவிடமுண்டவிமலனே - மேலாய்
வாசிகனேகண்பலித்து வாழ்விக்குஞ்சோணகிரி
தேசிகனேநீகண்டாய் திக்கு.

இதன்பொருள்.

திருப்பாற்கடலிலுதித்த விஷத்தையுண்ட நிர்மலஸ்வரூபனேமும் மூர்த்திகளுக்கு மேலாகியகடவுளே மாணிக்கமலையென்னும்அருணுசல த்திற்கதிபனே சராசரங்களையன்போடு இரட்சிக்குந் தயாபரனேகாலை யில்நல்லமலர்களைக்கொண்டு பக்தியுடனே உமது பாதார விந்தத்தைத் துதிக்கத்தக்க அறிவில்லாதஎளியேனுக்கு உம்மையல்லாமல் வேறுதிக் குண்டோஇல்லை-என்றவாறு (உ)

திக்குவேறில்லை திருவுளமேயல்லாம
லிக்குவேளைக்காய்ந்த வீசனே - மிக்கவிடந்
தன்னையுண்டசோணகிரித் தாணுவேநாயேற்கும்
பின்னையுண்டோநீயல்லாற் பேசு.

இதன்பொருள்.

கரும்பைவில்லாகவளைத்து சராசரங்களைமயக்கும் மன்மதனை நெற்றிக்கண்ணாலெரித்த அருணாசலக்கடவுளே திருப்பாற்கடலி லெழுந்த விஷத்தை யமுர்தம்போலுண்ட காலகாலனே அடியேனுக்கு உம்மை யல்லாமல்வேறுதிக்குண்டோசொல்லும்-என்றவாறு. (௩)

✓ பேசுமவர்வஞ்சப் பிறப்பறுக்குமென்றுலகில்
வீசுபுகழ்ச்சோணகிரிவித்தகா - மாசிலா
வண்ணாமலையானேயன்னைவயிற்றென்னையுருப்
பண்ணாமலையாகண் பார்.

இதன்பொருள்.

மெய்யன்போடு துதிப்பவர்களுடைய பிரவித்துன்பத்தை மாற்றுவாரென்று இப்பூமியின்கண்ணுள்ளபுண்ணியவான்கள்புகழும் அருணாசலக்கடவுளேஇதுவரையில் பிறவித்துன்பத்திலுழன்றஅடியேனைஇனியாவது தாய்வயிற்றிலுருப்படுத்தாமல் கிருபாநோக்கஞ் செய்யும் என்றவாறு. (௪)

பாருமனியிருந்தாற் பார்மீதினடியேனுக்
காராவார்சோணகிரி யண்ணலே - நீராப்
பிறப்பையகற்றுதற்கும்பின்னுகனேசூழ்ந்த
விறப்பையகற்றுதற்கு மின்று.

இதன்பொருள்.

மூடனாகியஅடியேன்பேரில் தேவரீர்கடாக்ஷம்வைத்து ரட்சியாவிடில் இப்பூமியில்என்னைஇரக்ஷிக்கப்பட்டவருண்டோஇல்லை திருவண்ணாமலையில் வாசஞ்செய்யுங்கர்த்தனே பிறப்பிறப்பென்னுஞ்சமுத்திரத்தில்அடியேன் மூழ்காவிதம் அருள்செய்யும்-என்றவாறு. (௫)

இன்றுபோகாவோ விருவினையுமும்மலமு
நின்றுதமியேனை நெருக்காம - னன்றிதரு
மாரணனேசோணகிரியத்தனேமாறேடுங்
காரணனேநீநினைந்தக் கால்.

இதன்பொருள்.

அடியேனைப்பற்றியிருக்கும் இருவினையென்னும் நல்வினைதீவினையும்மும்மலமென்னும்ஆணவம்-மாயை-காமியமும்-எளியேனைவருத்தாமல்இன்றேநீங்காதோநல்லகுளிர்ச்சிபொருந்திய கங்கையைச்சடாமகுடத்திற்றரித்த அருணசலக்கடவுளேஸ்ரீமகா விஷ்ணுவும் பிரமதேவனும் காணுதற்கரியகர்த்தனே தேவரீர்கிருபாநோக்கஞ்செய்தால்-என்றவாறு

காலன்றனக்கஞ்சக் காரணமென்னெஞ்சமே.
யாலமுகந்தவருணேசன் - கோலத்தை
நேசமுற்றுநீகருதி நீங்காமநின்றலைக்கும்
பாசமுற்றுநீக்கும் பரன்

இதன்பொருள்.

அஞ்ஞானம்பொருந்திய எனதுநெஞ்சமேநீ இயமனுக்குப்பயப்படவேண்டியகாரணமென்னவிஷத்தையுண்ட அருணசலக்கடவுளைபக்தியுடனேதுதித்தால் உன்னைவிட்டுநீங்காமல்வருத்தும் பாசபந்தங்களை யறுப்பார் - என்றவாறு. (எ)

பரமனீயென்றுபணிந்துருகிப்பாடிக்
கரஞ்சேர்த்துநீர்சோரக்கண்கள்-வரங்கேட்ட
வென்னவாவின்படியேயீந்தாயிதற்கருணை
மன்னவாகாணேன்கைம்மாறு.

இதன்பொருள்.

பரமேஸ்பரன் நீயே என்று பக்தியோடு தெண்டனிட்டு தோத்திரஞ்செய்து இருகரங்களையும் சிரசின்மேற் கூப்பி இரண்டு கண்களிலும் ஆனந்த வெள்ளம் பொங்கநின்று அடியேன் ஆசையுடனே கேட்

ட வரங்களையெல்லாம் எனதுகருத்தின்படியே கொடுத்தீர் அருணாசலத்தில்வசிக்கும் என்னையனே இதற்கு என்னாற்செய்யப்பட்ட பிரதியுபகாரம் ஒன்றுங்காணேனென்றவாறு. (௪)

மாறுகொண்டதக்கன் மனோரதமெல்லாந் தவிர்த்து
- வீறுகொண்டசோணகிரி வித்தகா - வாறுகொண்ட
செஞ்சடையாய்நின்னைத் தெரிசித்தல்வேண்டுமென் கண்
பஞ்சடையாமுன்னே நின்று.

இதன் பொருள்.

உம்முடையமகிமையறியாமல் விரோதங் கொண்ட தக்கனுடைய எண்ணங்களைக்கெடுத்து வெற்றிபெற்ற அண்ணா மலையானே கங்காதேவியைத்தரித்த சிவந்த சடாமகுடத்தை யுடையவனே வயது முதிர்ந்து என்கண்கள்பஞ்சடையாமுன்னம் தேவரீரை பக்தியுடனே கண்டுதரிசிக்கவேண்டும்-என்றவாறு. (௫)

பரிந்தணிந்தவெண்ணீறும் பாம்புந்தீக்கண்ணு
மரிந்தசிரமாலை யழகும் - தெரிந்து
நெருக்குமாம்வல்வினையை நீக்குமருணாசற்
கிருக்குமாங் கோலங்களைத்து.

இதன் பொருள்.

நம்மைவருத்துகின்ற கொடிய வினையை அகற்றும் அருணாசலக்கடவுளி னுருவமெப்படி யெனில் பிரகாசத்துடனே யணிந்த வெண்ணீறும், நாகாபரணமும், அக்கினிக்கண்ணும், உருத்திரர்களால் அறுத்துக்கோர்த்த சிரமாலையும் பொருந்தியதாம் அதைக்கண்டு மனமே நீதுதிப்பாய் என்றவாறு. (௬)

கோலமுதற்றேடிநெஞ்சே கூப்பிட்டுங்காணாத
கோலங்குருவடிவு கொண்டேதா - னாலந்
தரித்தபிரான்சோணேசன் றன்முனிந்துவேளை
யெரித்தபிரான்வந்தா னிதென்.

இதன் பொருள்.

அஞ்ஞானம்பொருந்திய என்மனமே பிரமா விஷ்ணுவாலுந்தேடிக்காணுதற்கரியவரும் திருப்பாற்கடலிலெழுந்த காளகூடவிஷத்தைக்கண்டத்திற்றரித்தவரும் மன்மதனை எரித்தவருமாகிய அருணாசலக் கடவுள்குருவடிவங்கொண்டுவந்ததென்னகாரணம் என்றவாறு. (௰க)

✓ என்னதவப்பயனோ வேழையேற்கென்றறியேன்
முன்னமறைகாணாத முக்கண்ணா-நின்னையே
தேடுகைக்குஞ்சோணகிரி தேசிகனேநின்புகழைப்
பாடுகைக்கும்பெற்ற பயன்.

இதன் பொருள்.

நான்குவேதங்களும் தேடிக்காணுதற்கரிய அருணாசலக் கடவுளே ஏழையாகியயான் முன்சனனத்தில் என்னபுண்ணியஞ்செய்தேனோதேவரீரை ஆசையோடு தேடுதற்கும் தேவரீரது கீர்த்தியைத்துதிக்குமதுவாகிய-பலனைப்பெற்றேன்-என்றவாறு, (௰உ)

பெற்றோம்பலனைப் பிறந்ததினானெஞ்சமே
யற்றோமனத்தி லனவரதம் - பற்றுவா
ருள்ளலக்குந்தீவினையை யோட்டுமருணகிரி
வள்ளலைக்கொண்டாட வரம்.

இதன்பொருள்.

மனமேநாம்இந்த மானிடசனனமெடுத்தால்மெய்யன்போடு துதிப்பவர்களது தீவினையகற்றும் அருணாசலக்கடவுளை துதிக்கவரம் பெற்றோம்-என்றவாறு. (௰௩)

வரம்பலிக்குமெய்ஞ்ஞானவாழ்வேபலிக்குந்
திரம்பலிக்குஞ்செல்வம்பலிக்கு-முரம்பலிக்குஞ்
சோணசலனைச் சுவாமிதனையுள்ளத்தே
காணார்கருத்தென் கருத்து.

இதன்பொருள்.

அஞ்ஞானத்துக் கிடமாகியஎன்மனமே அருணாசலக் கடவுளைத்து தித்தால் நினைத்தவரமும், மெய்ஞ்ஞானமும், நீடித்தவாழ்வும்,நல்லபுத் தியும், இலட்சுமிகடாட்சமும். தயிரியமுமுண்டாம்அக்கடவுளைநினையா தவர்களதுநெஞ்சம் என்னநெஞ்சம்-என் றவாறு. (௧௪)

கருத்திலருணேசன் கஞ்சமலர்த்தாளை
யிருத்திநினைப்பாரை யென்றும்-வருத்துமோ
நாட்டுப்பலவுயிரா நாடோறும்பின்றொடர்ந்து
வாட்டும்பிறவிநோய் வன்பு.

இதன்பொருள்.

ஸ்ரீகைலாயபதியாகிய அருணாசலக்கடவுளது தாமரை மலரையொ த்தஇரண்டுபாதங்களையும் மனத்திலிருத்தித்துதிப்பவர்களை எழுவகை த்தோற்றமாகிய சீவராசிகளைத் தொடர்ந்துபிறந்து பிறந்திறக்கும்பிறவி நோயானது வருத்துமோ என்றவாறு. (௧௫)

வன்பெருக்கிற்கன் மிதக்கும் வாய்முதலைபிள்ளைதரு
மென்புருக்கொள்பெண்ணா யிருக்குமே-யன்பருக்கு
நாட்டுகுருசோணகிரி நாதனடியார்மூவர்
பாட்டினிசைகேட்ட பரம்.

இதன்பொருள்.

பூமியிலுள்ளஅன்பர்களுக்குக் குருமூர்த்தமாகிய மெய்ஞ்ஞானம் உபதேசிக்கும் அருணாசலக்கடவுளது அடியார்களில்மூவராகியஅப்பர்-சுந்தரர்சம்பந்தர்என்னும்மகத்துக்களுடையதிருப்பாடல்களைக்கேட்டா ல்சமுத்திரத்திலிட்ட கருங்கல் மிதந்துகரையேறும் முதலைவிழுங்கியபி ள்ளைபிழைத்துவரும்எலும்புகள் பெண்ணுருவாயெழுந்திருக்கும்-என் றவாறு. (௧௬)

பரமனருணேசன் பதம்பணியார்க்கென்றுங்
கருமஞ்சிதையுமெனல் கண்டோ-மருமந்த
கூட்டுத்தலைபோய்க்கொடியதக்கன்வேள்வியிலே
யாட்டுத்தலையாகை யால்;

இதன்பொருள்,

பரப்பிரமசொரூபியாகிய அருணாசலக்கடவுளது பாதார விந்தங்களைத்தியானஞ்செய்யாதவர்கள் செய்யுங்கருமஞ் சிதையுமென்பதைப்பிரத்தியட்சமாகக் கேட்டிருக்குறோம் அதென்னெனில் கர்வத்தினால்அவரைமதியாமல் யாகஞ்செய்த துன்மார்க்கனாகிய தக்கன்தனதுசிரத்தையிழந்துஆட்டுத்தலைப்பெற்றதால்-என்றவாறு, (௰எ)

ஆலம்வருவதுகண் டஞ்சியமரர்குழாஞ்
சாலவெருண்டோடுஞ் சமயத்தி-லோலமென
நின்றானுலகறிய நேசமடியாரிடத்துக்
குன்றாதசோணகிரிக் கோ.

இதன்பொருள்,

சமுத்திரத்தில் ஆலகாலவிஷம்பரவிவருவதைக்கண்டுதேவர்களெல்லோரும் நடுநடுங்கிபயந்தோடி முறையிட்டகாலத்தில் அவ்விஷத்தைத் தமதுதிருக்கரத்தால் எடுத்துப்புசித்துநின்றார் அடியார்களிடத்தில் பரிபூரணகடாட்சம்வைத்த அருணாசலக்கடவுள் என்றவாறு. (௰அ)

கோடிவிதிமாளிற் குலாவுகமலக்கண்ண
னோடிவடவாலுறங்குமே-நாடுங்கா
லக்கண்ணர்கோடியழியினருணகிரி
நக்கனருள்சற்றே நகும்.

இதன்பொருள்,

கோடிப்பிர்மாக்கள் பிறந்து ஒவ்வொருத்தர் தெய்வவருஷத்தில் நூறாயிரம் வருஷம் தமதுதொழிற்களை நடாத்தி இறந்தால் தாமரை மல

ளையொத்த கண்களையுடைய ஸ்ரீமகாவிஷ்ணுவானவர்சென்று வடவிரு ட்சமான ஆலாவிருட்சத்தினிலையில் பள்ளிக்கொள்வார் அதுபோல்கோ டிமகாவிஷ்ணுக்கள் அழிந்தால் தக்கனென்னும் ஸ்ரீ அருணாசலக் கடவு ள் சற்றுநேரம் புன்னகைசெய்வர்-என்றவாறு. (௧௯)

நகுமானையேந்தருணை நம்பாபிறப்பிற்
புகுவேனைக்காக்கும் புனிதா - தகுமேனைப்
பெற்றதுணைநீயல்லாற் பேருலகிநாயேனுக்
குற்றதுணைமற்றியாவ ரோது.

இதன் பொருள்

புன்னகையையுடைய மானென்னும்பார்வதியை இடப் பாகத்திற் றரித்த அருணாசலக்கடவுளே பிறப்பிறப்பென்னும் ஊசலிற்புகுதும்அ டியேனை அவ்வழியிற் புகுதாமற் காக்கும் சீவகாருண்ணியனே இவ்வி டத்தில் எனக்குநெருங்கியதுணை நீயல்லாமல் பெரிய உலகத்தினிடத்தி லுள்ளவர்களில் யார்சொல்வாய் என்றவாறு. (௨௰)

ஓதக்கடனஞ்சை யுண்டசோணாசலனை
யோதக்கடனெஞ்சே யோதினற் - பாதம்
பெறலாகமது பிணிமூப்புச்சாக்கா
டறலாங் கரையேறலாம்.

இதன் பொருள்.

மூடத்துவம்பொருந்திய என்மனமே சொல்லுதற்கரிய சமுத்திர த்திலுற்பவித்த விஷத்தைப்புசித்த அருணாசலக் கடவுளைத் துதிப்பா யாகதுதித்தால் அவருடையதிருப்பாதங்களைக்காணலாம் நமதுபிணிமூ ப்புசாக்காடென்னும் மூவுபாதிகளையுங்கடந்து கரையேறலாம்-எ று. ()

ஆமென்றுநம்பி யநுதினமும்போற்றினு
ளுமென்றுபற்றி நலமாகக் - காமித்துச்
சிட்டாகுந்சோணகிரி சிந்தித்தானெஞ்சமே
விட்டேகும்வெய்ய வினை.

இதன் பொருள்.

அஞ்ஞானம்பொருந்திய என்மனமே திருவண்ணாமலையி லெழுந்தருளியிருக்கும் அருணாசலக்கடவுளே பரப்பிரமமென்றுபக்தியுடனே எந்நாளுந்துதித்தால் அப்பெயர்க்குரியவன் யானேயென்றுஎதிர்படுவர் அதனால்நமதுகொடியவினை நீங்கிப்போம்.என்றவாறு. (௨௨)

வெய்யபிறவிதனை வேரறுக்குஞ்சோணகிரி
யையரடியார்பாட்டிற் கல்லாமற் - றுய்யகரா
வாய்க்குமோபிள்ளையுந்தான் வாரிதியிற்கன்மிதந்து
காய்க்குமோ வாண்பனையுங்காய்.

இதன் பொருள்,

கொடிதாகிய பிறவித்துன்பத்தை வேரோடு களையும் அருணாசலக்கடவுளது அடியார்களின்பாடல்களுக்கல்லாமல் முதலைவாயிலகப்பட்ட பிள்ளை உயிர்த்தொழுமோ சமுத்திரத்திலிட்டகருங்கல்மிதந்துகரையேறுமோ ஆண்பனைகாய்க்குமோ-என்றவாறு, (௨௩)

காயநெகிழாமுன் கண்களிருளாமுன்
வாயிலுள்ளபல்லும் வழுவாமுன் - காயம்பார்த்
தேடிநமன்வாராமுன் னுள்ளமேசோணகிரி
நாடிநமவென்றே நட,

இதன் பொருள்.

சுகதுக்கத்துக் கிடமாகியமனமே சரீரந்தளர்ந்து வருத்த மடையாததற்குமுன்னும் கண்கள் ஒளிகுறையாமுன்னும் வாயிலுண்டாகியபற்கள் வலுகுறைந்து அசையாததற்குமுன்னும் தமது தேகத்தைக்கண்டுஇயமன்நெருங்காமுன்னும் அருணாசலக்கடவுளைத் துதித்துஎதிர்கொள்வாய் என்றவாறு, (௨௪)

✓ நடக்குங்குலங்கல்வி நம்மவென்பாராசை
யடக்கும்வகைசற் றறியார் தொடுக்குநூல்
காட்டுமோசோணேசன் கஞ்சமலர்த்தாளிணையைக்
கூட்டுமோசொல்லீர் குலம்,

இதன் பொருள்,

தங்கள்நடக்கையாலுண்டாகிய உயர்ந்தகுலமும் நிறைந்தகல்வியும் நாமேபெற்றோமென்பர் ஆசையென்னுந்துக்கத்தையடக்கவகையறியார் தாங்கள்கற்றநூற்கள் அருணசலக்கடவுளின் தாமரைமலரையொத்த பாதங்களைக்காட்டுமோ உயர்ந்தகுலம் அவருடன் சேர்க்குமோ சொல்லீர் என்றவாறு, (உரு)

✓ குலமில்லார்வண்மைக் குணமில்லார்க்கல்வி
நலமில்லாராகுனு நன்றே-வலம்வந்
தரியதிருவருணை யண்ணலுக்காளாவரர்
பெரியவர்க்குமேலான் பேர்,

இதன் பொருள்,

உயர்ந்தகுலத்தைப் பெறாதவர்களானாலும் நல்லபுத்தியில்லாதவர்களானாலும் கல்வியில்லாதவர்களானாலும் நன்றேசொல்லுதற்கரிய திருவருணையைவலம்வந்து அருணசலக் கடவுளுக்கு அடியாரானல் அவர்களே வேதசாஸ்திரங்களை யுணர்ந்த அந்தணர்களுக்கு மேலான பெரியோர்கள்-என்றவாறு, (உசு)

பேரும்பெருவாழ்வும் பிள்ளைகளும்வேண்டுவா
ராரும்பரவு மருணேசன் சீரை
யுறக்கத்திருமறக்க வொண்ணுதுரைக்கிற்
பிறக்கக்கிடையாது பின்,

இதன் பொருள்,

கீர்த்தியையும் மிகுந்த செல்வத்தையும் புத்திரர்களையும் வேண்டி வருந்துவர்கள் அவ்வாசையைநீக்கி வேதத்தின்பொருளையறிந்த தபோ

தனர்முதலியசகலருந் துதிக்கும் அருணாசலக்கடவுளது புகழை நித்தி ரையிலும்மறவாமல் சிந்திப்பா ராஞல் பிறப்பிறப்பை நீக்கி மோட்சத் தையடைவர்-என்றவாறு, (உள)

பின்னறியேன்முன்னறியேன் பேதையேன்பாமாலை
யென்னறியேன்சோணகிரி யீசனே நின்னருளைக்
கொண்டிணையாநிற்குங் குறியுங்குறிதேடுங்
கண்டிணையாதென்றன் கருத்து,

இதன் பொருள்,

சதுர்யுகத்திலுமழிவில்லாத அருணாசலக் கடவுளே அறிவில்லாத வனுகியயான் பூர்வஜனனங்களையுமறியேன் இனிமேலுண்டாகுஞ் சன னத்தையுமறியேன் தேவரீரைபாமாலைகளைக்கொண்டு துதிக்கவுமறியே ன்உமதுகிருபா கடாட்சத்தையறிந்துசொல்ல அரிதாயிருந்தாலும் திவ் யமங்கள ஸ்வரூபத்தின்பெருமையையாவது இன்னதென்று குறித்தறி யாது என்னுடையநெஞ்சம் என்றவாறு (உஅ)

கருத்தறிந்தமெய்யடியார் கண்காணவெள்ளை
யெருத்தில்வருஞ்சோணகிரி யீசா-பருத்த
வலங்காரநால்வேத னைந்தலையுளொன்றைக்
கலங்காமனீயறுத்தாய் கண்டு,

இதன் பொருள்,

நல்லபத்தியையுடைய அடியார்கள்கண்களாற் கண்டுதெரிசிக்கவெ ண்மைபொருந்திய ரிஷபத்தின்மேல் ஏறிவரும் அருணாசலயீசனே மி குந்தஅலங்காரத்தையுடைய நான்கு வேதத்தையும் உணர்ந்த பிரம்மா வினது ஐந்துசிரசில் ஒருசிரசை நீர் மனக்கிலேசமில்லாமல் அறுத்தீர்-என்றவாறு, (உகூ)

கண்டுமிலையென்பார் கருத்துநாவும்வாழி
யண்டர்கோவேயருணை யண்ணலே விண்டவரஞ்
சங்கையெடுத்தோன்கல் சரணந்திச்சாற்றுமுன்றன்
செங்கையிலேவேதன் சிரம்,

இதன்பொருள்,

பக்தர்களாகிய பெரியோர்கள் தேவரீரது திருவிளையாட்டைகண்களாற்கண்டாலும் இன்னங்காணவேண்டுமென்னும் விருப்பத்தால் கண்டதில்லையென்பார் அவர்களையொத்த பெரியோர்களது கருத்தையும் நாவையும் ஆலயமாகக்கொண்ட தேவதேவனே அண்ணாமலையீசனே வெண்மைபொருந்திய சங்கைத்தரித்த ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் தாமரைமலருக்கொப்பாகிய தமதுகண்களிலொன்றை தேவரீரதுபாதத்தில் சாற்றியிருக்கஉமதுசிவந்தகரத்தில்பிரமகபாலமேந்திக்கொண்டீர்என்றவாறு

சிரமாலைதானணிந்து சேவிலுகந்தேறி
யருமாமறைதேடுமண்ணல் - விருமா
முனிக்கூட்டம்போற்று முதல்வனருணேச
னிக்கூட்டான் துன்பத்தெமை,

இதன்பொருள்,

சிரமாலையணிந்து ரிஷபவாகனத்தின்மேல் விருப்பத்தோடேறும் அரிதாகிய நான்குவேதங்களுந்தேடப்பட்ட சர்வேசன் மகாதவத்தைப் பெற்றமுனீஸ்வரர்கள்தோத்திரஞ்செய்யும்அருணாசலக்கடவுள்எங்களை துக்கசாகரத்திலே அலையவிட்டார்-என்றவாறு. (௧௧)

எமையாளுஞ்சோணகிரி யீசாநின்பாகத்
துமையாளுநீயுமுகந்த-சமையத்
திருக்கின்றகோலத்தை யான்காணவேண்டி
யிருக்குங்கருணைசெய்வா யென்று.

இதன்பொருள்,

எங்களை அடிமைகொண்டாளும் அருணாசலக்கடவுளேஉமதுஇடப்பாகத்திலமர்ந்திருக்கும் உமையவளும் தேவரீரும்சந்தோஷத்துடனிருக்கும் அலங்காரத்தைமூடனாகிய யான்கண்களாற்காண இச்சித்தேன் கடாட்சஞ்செய்வீர்-என்றவாறு, (௧௨)

என்றுமருணேச னிருபதத்தைநம்பாதார்
குன்றில்வனத்திற் குகையதனிற்சென்று
திரிந்தென்பலமருந்துதின்றுசிலகால
மிருந்தென்னிராமலிருந் தென்,

இதன்பொருள்,

எப்போதும் அருணாசலக்கடவுளது இரண்டுபாதங்களையும் நம்பி துதியாதபேர்கள் துறவடைந்துமலையிலும் காட்டிலுமகுகையிலும்போய்த்திரிந்தாலென்ன அனேகஅவுஷதங்களான இலைசருகுகளைப்புசித்துசிலதுகாலம் உயிரோடிருந்தாலென்ன இராமலிருந்தாலன்ன பிரயோசனமொன்றுமில்லை-என்றவாறு, (௧௧)

ஏனமனந்தேடவிணையடியுஞ்சீர்முடியுந்
தானவற்றிற்கெட்டாத தாணுவா ஞானத்
தழல்கண்டமேனித்தலைவனருணேசன்
கழல்கண்டார்காணார் கரு.

இதன்பொருள்.

ஸ்ரீமகாவிஷ்ணுவானவர்பன்றியாகவும் பிரமாவானவர் அன்னமாகவும்ரூபங்கொண்டு இணையில்லாதஅடியையும் சிறப்புற்றோங்கிய முடியையும் கற்பகோடிகாலந்தேடியும் அவர்களுக்குப் புலப்படாமல் நின்ற அழலையொத்த திருமேனியையுடைய அருணாசலக்கடவுளது பாதாரவிந்தங்களைக்கண்டு தெரிசித்தவர்கள் பிறப்பிறப்பென்னுமூசமில்வருந்தார்கள்-என்றவாறு. (௧௪)

கருமாமுகில்வண்ணன் கஞ்சனுக்குமெட்டாப்
பெருமான்விடையேறும் பெம்மா-னொருமான்
மழுவேற்குஞ்சோணகிரிமன்னனடியாரைத்
தொழுவேற்குமுண்டோ துயர்.

இதன்பொருள்,

கறுத்த மேகத்தையொத்த தேகத்தையுடைய மகாவிஷ்ணுவும்-தாமரை மலரி லுதித்தெழுந்த - பிர்மாவும் - தேடுதற் கரிய பெரு

மானும்ரிஷபவாகனத்தின்மேலேறும் மகாதேவனும் மான்மழுவேந்து ம்காலகாலனுமாகிய அருணசலக்கடவுளது மெய்யடியார்களைக்கண்டுது திப்பவர்களுக்குத் துயரமுண்டோ இல்லை-என்றவாறு. (௩௫)

துயர்கொண்டுநாளுந் தொலையாப்பிறப்பி
லயர்கின்றநாயேற்கு மாமோ-உயர்தவத்தோ
ராரும்பரவு மருணேசரம்புயத்தால்
சேருங்கருத்தொருக்காற் செப்பு

இதன்பொருள்.

துன்பத்தைக்கொண்டு எந்நாளும்அழியாத பிறவிக்கடலிலேஅலை கின்ற அடியேனுக்கு அக்கடலைநீந்திக்கரையேறுதல் உண்டாமோ மிகு ந்ததபோதனர்களால் துதிக்கும் அருணசலக்கடவுளே உமதுபாதாரவி ந்தங்களை அடையும்நெறியை ஒருதரஞ்சொல்லும்-என்றவாறு. (௩௬)

செப்பரியமால்பிரமர் சிந்தைதனக்கெட்டாத
வப்பரியசோணகிரி யப்பனே-யெப்பொழுதும்
பெண்ணைவிட்டுநீங்காரின் பேரழகுசந்ததமென்
கண்ணைவிட்டுநீங்காது காண்.

இதன் பொருள்.

சொல்லுதற்கரிய மகாவிஷ்ணுவாலும் பிரமதேவனாலும் நினைத்த ற்கரிய பெரியஅருணசலக்கடவுளே எப்போதும் மலைகளைவிட்டு நீங்கா ததேவரீரதுபேரழகு எக்காலமும் அடியேனது இரண்டு கண்களையும் விட்டுநீங்காது-என்றவாறு. (௩௭)

காணரரிபிரமர் கஞ்சமலர்தாளிணையை
நாணமற்றுன்காண நாடியே-சேணுட
ராயும்புகழருணை யண்ணமலையானே
மாயுந்தமியேன் மனம்.

இதன்பொருள்.

தேவலோகத்தாரால் தோத்திரஞ்செய்யும் அருணசலக் கடவுளே மகாவிஷ்ணு பிரமதேவன் இவர்களேதேவரீரது பாதாரவிந்தத்தைக்காணர் அதைசாஸ்திரங்களா லறிந்தும் புல்லறிவனகிய யான்காணநாடியதால்எளியேன்மனம் விசாரப்படுத்தும்-என்றவாறு. (௧அ

மனத்திற்பயமறிந்து மாமுனிவர்க்காகச்
சினத்திற்புரமெரித்த சீமா-னனத்தனரு
ட்க்கன்றலையறுத்த தாணுவருணகிரி
நக்கன்றனேமனமே நம்பு.

இதன்பொருள்.

முனீஸ்வரர்களும், தேவர்களும், முப்புராதியர்களால் துன்பப்படுவதையறிந்து கோபமுற்று முப்புரத்தை யெரித்த தயாபரன் தக்கன் தலையையறுத்த அருணகிரிநாதன் மனமேநமக்குத்துணையென்றுநம்புவாய் என்றவாறு. (௧௯)

நம்பியிருநெஞ்சமே நாளுமருணகிரி
யும்பர்கோனென்றுரைத்த துண்மையே நம்பிக்
கெடுத்தாலுஞ்சோணேசன் கேடுபடாதெம்மை
யெடுத்தாலுஞ்சோணேச னென்று.

இதன்பொருள்.

அஞ்ஞானம்பொருந்திய என் மனமே நீ எப்போதும் நம்பி யிருப்பாய் நான்குவேதங்களும் அருணசலக்கடவுளே தேவனென்று சொல்வதுஉண்மையே நீநம்பியிருந்து நம்மைக் கெடுத்தாலும் அல்லதுகேட்டிருமல் இரட்சித்தாலும் சோணேசனென்றுசொல்வாய்-என்றவாறு,()

என்றுதருவாய்மகிழ்ந்தே யான்பெறுவதெந்நா
ளின்றுதமியேற் கியம்பிடாய் நன்றிதரு
மேகனேசோணகிரி யீசனேசேவேறும்
வாகனேசாகா வரம்.

இதன்பொருள்.

நம்மைப்பத்தரும் ஏகவஸ்துவான அருணாசலக்கடவுளோரிஷபவாகனமேறுங்கர்த்தனே நீர்எனக்கு அழியாதவரம் என்றைக்குகொடுப்பீர்மூடனாகியயான் என்றைக்குப்பெறுவேன் இப்போது அடியேனுக்குச் சொல்லுவீர்-என்றவாறு. (௬௧)

சாகாவரம் பெறலாஞ் சந்ததமுஞ்சோணகிரி
நாகாபரணன்ற னடியே-யேகாந்த
நண்ணுமக்கமாலைகொடு நாவாரவைந்தெழுத்தை
யெண்ணுமறவா தெடுத்து.

இதன்பொருள்.

என்றைக்குஞ் சாகாவரம்பெறலாம் அதெப்படியெனில்நாகங்களை ஆபரணமாகப்பூண்ட அருணாசலக்கடவுளதுபாதாரவிந்தத்தைஎப்போதும்நம்பி ஏகாந்தமாகஉருத்திராட்சமாலையைக் கைக்கொண்டுநாவினால் பஞ்சாட்சரத்தை மறவாமல்ஜெபித்தால்-என்றவாறு. (௬௨)

எடுத்தபயனை யிருவினையையெண்ணு
ரடுத்தசிவபூசை யறியார்-தொடுத்த
நெறியாகுஞ்சோணகிரி நித்தரடியாரை
யறியாதமானிடவ ரச்சு.

இதன்பொருள்.

இந்தசெனனம் எடுத்தபயனையும் நல்வினைதீவினையென்னும் இருவினையையும்நினையார் நெருங்கிச்சிவபூசையுஞ்செய்யார்நல்லநெறிமிகுந்த அருணாசலக்கடவுளது மெய்யடியாரையும் அறியார் மானிடரென்று சொல்லும்மௌடகர்-என்றவாறு. (௬௩)

அச்செல்லாமொன்று வதிலேயிருவகையா
வைச்சதென்னசோணகிரி வள்ளலே யிச்சையிலே
வாழ்ந்துசிலபேரிருக்க வாய்புதைத்துகைகட்டி
தாழ்ந்துசிலபேரிருக்கத் தான்.

இதன்பொருள்

அக்கினிஸ்வரூபம் பொருந்திய அருணசலக்கடவுளே சகலமானி டனாயும் அச்சியினல்சிருஷ்டித்து அதில் இரண்டுபிரிவாகப்பிரந்துசில ர்தங்களிஷ்ட பாக்கியங்களையனுபவித்து வாழ்ந்துகொண்டிருக்கவும்சில ர்தரித்திரத்தினல் மெலிந்துவாய்மூடிகைகட்டிக்கொண்டுவாழ்வையுடை யவர்களுக்குத் தாழ்ந்துபணிவிடைசெய்யவும் அமைத்ததென்ன-என்ற வாறு. (சச)

தானேயுலகுடையோன் றன்னசைவேபல்லுயிர்க்குந்
தானேயனைவர்க்குந் தாதைதாய்-தானே
யனைத்துயிருங்காக்கு மருணேசனென்றான்
மனத்துயரம்போவதே மாண்டு.

இதன்பொருள்.

நானேஉலகங்களிலெல்லா நிறைந்தவன், என்னசைவே சராசரமு தலியசகலசீவராசிகளும், நானேஎல்லோர்க்குந்தந்தையாய்,நானே சகல சீவஜெந்துக்களையும் காக்கும் அருணசலக்கடவுளென்றுசொல்லியகாத் தனைதியானித்தால்மனத்தின்கணுண்டாகிய துக்கமான துநாசமாய்ப்போ ம் என்றவாறு. (சரு)

மாண்டுபிறந்துழலு மாப்பிணியைநீக்குதற்கு
வேண்டுமருந்துனக்கு வேண்டினு-வீண்டுலகில்
வீணேசர்சொல்லை விரும்பாமனெஞ்சமே
சோணேசரென்றொருக்காற் சொல்.

இதன்பொருள்

மூடத்துவம்பொருந்திய என்மனமே இறந்தும்பிறந்தும் முழலா பட்டகொடியவியாதியை நீக்குதற்குத்தகுந்த மருந்துஉனக்குவேண்டியி ருந்தால் இந்தவுலகத்திலிருக்கும் வீணனதெய்வங்களைக்கருதாமல்அரு ணசலக்கடவுளேயென்று ஒருதரஞ்சொன்னல் அதுவேநல்லமருந்தாம் என்றவாறு. (சசா)

சொல்லரியநால்வேதஞ் சொன்னபடியேகருதி
நில்லரியபூசையிலே நேசமா-வெல்லரிய
நஞ்சேதரித்தருளு நாதரடித்தாமரையை
நெஞ்சேமறவாம னீ.

இதன்பொருள்.

துன்பத்துக் கிருப்பிடமாகியஎனதுநெஞ்சமேசொல்லுதற்கரியநான்குவேதங்களும் முறையிட்டது போலவேநினைத்து அரிதாகிய சிவபூசையிலேபக்தியோடிருந்து வெல்லுதற்கரிய விஷத்தைக்கண்டத்திற்றரித்தஅருணாசலக்கடவுளது பாதாரவிந்தத்தை மறவாமல்நினைத்துக்கொண்டிருப்பாய்-என்றவாறு. (சஎ)

நீயேவரல்வேண்டு நின்னைப்போ லானதுணை
நாயனுக் கியாருண்டு நாடுங்காற் -றூயகமா
மண்ணு மலைமேவு மப்பனே யென்பிறவிப்
புண்ணு மலையகற்றும் போது.

இதன்பொருள்.

அருணாசலத்தில் வசிக்கும் அப்பனே என்பிறவி நோயாகிய மலையைநீக்கும்போது நீயேவந்து இரட்சிக்கவேண்டும் நினைக்குமிடத்தில்உம்மைப்போல் ஆதரவாகியதுணை அடியேனுக்கு யாருண்டு இல்லை-என்றவாறு. (சஅ)

போதுமதிசூடும் புனிதர்புவியீன்ற
மாதுபங்கரண்ணா மலைநாதா-பாத
மிறுகப்பிடிமனமே யெந்நாளு நின்னைக்
குறுகப்பயப்படுமே கூற்று.

இதன்பொருள்.

இளஞ் சந்திரனைச்சடாமகுடத்திற்றரித்தவரும்பூலோகத்தைப்பெற்றமாதாவாகிய பார்வதியைஇடபாகத்தில் வைத்தவருமாகியஅருணாசலக்கடவுளது பாதாரவிந்தங்களைமனமே நீகெட்டியாகப்பிடி கூற்றுவனென்னுமியமன் எப்போதும்உன்னிடத்தில் நெருங்கப்பயப்படுவான்-என்றவாறு. (சகூ)

கூற்றிருக்குமுன்காலிற் கூறுபுரங்காலி
லேற்றிருக்குமாயவன்கணெப்பொழுதுந்-சாற்றுகையி
லம்புயத்தோன்கம்மிருக்கு மண்ணுமலைநாதன்
செம்புயத்திற்காரிணையாஞ் செப்பு.

இதன்பொருள்.

இயமதருமராஜனைமார்க்கண்டன்நிமித்தம்உதைத்தலால் அவன்முன்காலில்விழுந்துகிடப்பன் புறங்காலில்மகாவிஷ்ணுவானவர்சக்கராயுதம்பெறும்பொருட்டு தினந்தினம்நூறுதாமரைபுட்பங்கொண் டர்ச்சிக்குநாளில்ஒருநாள்அவர்பக்தியைச்சோதிக்கும்பொருட்டுஒருபுட்பத்தைமறைத்தலால் அந்தப்புட்பத்திற்குப் பதிலாகச்சாற்றிய மகாவிஷ்ணுவினது கண்ணிருக்கும் சொல்லுதற்கரிய கரத்தினிடத்தில்தாமரை மலரிலுதித்த பிரமன்தனக்குஐந்துசிரசென்றுகர்வங்கொண்டதையறிந்துகிள்ளியசிரமிருக்கும்இவ்வித பெருமையையுடையஅருணசலக்கடவுளுக்குச்சமானமானவர்யார்மனமேசொல்வாய்-என்றவாறு. (கூ0)

செப்பரியஞானச் செழுஞ்சுடரேசோணகிரி
யப்பனேநன்னூ லறிந்தாலு மிப்புவியிற்
கொண்டகுருவைப்பொருளாக் கொள்ளார்பயனேது
கண்டவெல்லாம்வீணிலே கற்று.

இதன்பொருள்.

சொல்லுதற்கரிய ஞானத்தின் பொருளாகியஅருணசலக்கடவுளே உமதுஆகமசாஸ்திரங்களைப் பழுதறக்கற்றாலும் இப்பூவுலகின்கண் நங்களை அடிமையாகக்கொண்ட ஞானாசிரியனைப்பொருளாகக்கொண்டுகனையேறாதவர்கள் பலசாஸ்திரங்களைக்கற்றும்வீணுவதன்றிப் பயன்பெறார் என்றவாறு. (கூக)

கற்றதனாற்றொல்லைவினைக் கட்டறுமோநல்லதலம்
பெற்றதனாற்போமோ பிறவிநோ-யுற்றகட
வஞ்சுகந்துகொண்டருளை நாதரடித்தாமரையை
நெஞ்சுகந்துகொள்ளா நெறி.

இதன்பொருள்,

பலசாஸ்திரங்களைக் கற்றதனால் முன்சனனத்திற் செய்த கொடிய வினை தம்மைவிட்டுநீங்குமோ, நல்ல உயர்ந்தகுலத்திற் பிறந்ததால்பிறவியென்னும் யுவவ்வியாதி நெருங்காமல்போமோ திருப்பாற்கடலிலுதித்தவிஷத்தை விருப்பத்தோடுண்ட அருணாசலக்கடவுளது பாதாரவிந்தத்தை மெய்யன்போடு துதித்துவணங்காமல்-என்றவாறு. (௫உ)

நெறியுண்டாநல்ல நிலையுண்டாஞானக்
குறியுண்டாமெண்ணமெலாங் கூடுந் - செறிவுண்டா
மாதியருணகிரி யண்ணலாரைந்தெழுத்தை
யோதிமடநெஞ்சமே யுன்.

இதன்பொருள்.

அஞ்ஞானம்பொருந்திய என்மனமே ஆதிமூர்த்தி யாகிய அருணாசலக்கடவுளது பஞ்சாட்சரத்தைப் பக்தியுடனே செபித்தால் நல்லநெறியும் அழியாப்பதவியும் ஞானப்பிரகாசமும் உண்டாம் நினைத்தகருமங்களெல்லாம் விக்கினமின்றிமுடியும்-என்றவாறு. (௫௩)

உன்னக்கருத்துண் டுரைப்பரர்குநாவுண்டு
பன்னச்சிவனூல் பலவுண்டு-முன்னமறைக்
கெட்டாதசோணகிரி யீசரிருதாள்பணிய
வொட்டாதுபாவ முயர்ந்து.

இதன்பொருள்.

நினைப்பதற்குக்கருத்தும் துதிசெய்யநாவும், வாசிக்கச் சிவபுராணங்கள்பலவும் தடையில்லாதிருந்தும் நான்குவேதங்களுக்குமெட்டாதஅருணாசலக்கடவுளது இரண்டுபாதங்களையும் வணங்கி துதித்து நற்கதியடையவொட்டாமல் முன்செய்த கொடியவினை எதிரில் நின்றுதடுக்கும் என்றவாறு. (௫௪)

உயர்ந்தவர்க்குளெல்லா முயர்ந்திருக்குங்கோவே
நயந்தபுகழ்ச்சோணகிரி நாதா - பயந்தமர
ருண்ணப்படாநஞ்சை யுண்டவுன்னைச்சாமவரோ
டெண்ணப்படுவா ரதென்

இதன் பொருள்.

உயர்ந்தபொன்னுலகத்தின்கண் வசிக்கும் தேவர்களுக்குஅரியதெய்வமாகிய தேவாதி தேவனே சகலசீவசெந்துக்களையும் இரட்சித்துப்புகழ்பெற்ற அருணுசலக்கடவுளே தேவர்களெல்லாம் பயந்து முறையிட்டகாலத்தில் உண்ணுதற்கரிய விஷத்தை விருப்புடனே யுண்ட தேவரீைஇறந்துபோம் தேவர்களுக்குச் சமமாகநினைப்பார் இது என்னஅதிசயம் என்றவாறு. (௫௫)

என்னசன்ன மெடுத்தார்புவிமீதி
லன்னமிடாரின்சொல் லறிகலார்-முன்னமே
யொன்னார்புரமெரித்த வுண்ணுமுலைபாக
வென்னார்திருநீ றிடார்.

இதன்பொருள்.

இவ்வுலகத்தின்கணுள்ள மனிதர் என்னசனன மெடுத்தார் அன்னதானஞ்செய்யார் பிறருக்கு விருப்பத்தைக்கொடுக்கும் நல்ல சொற்களையுஞ்சொல்லார் முன்னே தேவர்களுக்குப் பகைவராகிய திரிபுரத்தாரை உண்ணுமுலையம்மையை இடப்பாகத்தி லுடையவனே யென்றுஞ்சொல்லார் வெண்மைபொருந்திய திருநீறும் அணியார்-என்றவாறு. (௫௬)

நீறிடேனஞ்செழுத்தை நேசமுடனேகருதிக்
கூறிடேனென்னையுமாட் கொள்வதனுக்-காறணிந்த
வேணியார்சோணகிரி வித்தகனார்வெற்றிமழுப்
பாணியார்க்கன்றோ பரம்

இதன் பொருள்,

திருநீறுந்தரியேன் பஞ்சாக்ஷரத்தையும்பக்தியுடனே நினைத்துஜெபியேன் அப்படிப்பட்ட அறிவீனனாகிய என்னையும்அடிமைகொண்டுஇரட்சித்தருளுதற்கு கங்கையைத்தரித்தசடாமகுடத்தையுடையவரும்மான்மழுதரித்தவரும்ஆகியஅருணை சலக்கடவுளுக்கல்லவோபாரம்-என்-று.

பரகதிக்குவித்தாமுன் பஞ்சாக்கரத்தைப்
பரபரப்பவெண்ணாத பாவ நரகப்
பிறப்பிற்குமீடாப் பிறருந்தருணையீசா
விறப்பிற்குமீடாயி னேன்.

இதன் பொருள்,

மெய்யறிவையுடையவர்கள் துதிக்கும் அருணாசலக்கடவுளே பரகதியென்னுமோக்ஷத்திற்கு வித்தாகியஉனதுபஞ்சாட்சரத்தை பக்தியுடனேஜெபியாதபாவத்தினன் நரகமென்னும்பிறப்பிற்கு ஈடாகப்பிறந்துஇறப்பிற்குஞ்சமமானேன்-என்றவாறு. (௫அ)

* ஏனிருந்துநெஞ்சே யிரவுபகலாயுடலைத்
தானெறுப்பாய்சோணகிரித் தாணுவா மானுகந்த
வேந்தையா னீங்கு மிருவினைநோய்சிந்திக்குஞ்
சிந்தையால்வேறென் செயல்.

இதன் பொருள்,

மூடத்துவம்பொருந்தி எனதுநெஞ்சமே நீயேன் இரவும்பகலுமாகஒழியாமல் சரீரத்தைநிந்திக்கிறாய் மான்மழுதரித்த அருணாசலக்கடவுளாகிய என்னப்பனால் நல்வினை தீவினையென்னுமிருவினையாகியநோய்நம்மைவிட்டகலும் அந்தஈசனைத்துதியாமல்சரீரத்தைநிந்தித்தால் பிரயோசனமென்ன என்றவாறு. (௫௧)

என்செயலாஞ்சோணேச ரிட்டபடியேயொழிய
நெஞ்சையெலாம்புண்ணா நினைந்தாலும்-விஞ்ச
வருமோபெருவாழ்வு வல்லமையாநெஞ்சந்
தருமோநம்பேராசை தான்.

இதன் பொருள்,

நம்மாலே என்னசெய்யலாம் அருணாசலக்கடவுளமைத்த கட்டளையின்படியல்லாமல் மனதுபுண்ணாகக் கவலைகொண்டாலும் நமதுவல்லமையினால் மிகுத்தவாழ்வுவருமோமனம்நமதுபேராசையின்படியேகொடுக்குமோ-என்றவாறு. (சாம)

தானேயெனக்குத் தவமாய்த்தவப்பயனாய்த்
தானேயெனக்கன்னை தாதையாய்த்-தானென்னைச்
செப்பரியநின்பாதஞ் சேர்விக்குஞ்சோணகிரி
யப்பனேநீயேந்து மான்.

இதன் பொருள்,

அந்தரவாசிகள் துதிக்கும்அருணாசலக்கடவுளே தேவரீர்இடப்பாகத்திற்றரித்த பார்வதியென்னுமானே எனக்குத்தவமும்தவத்திற் பெறப்பட்டபேறும் தாய்தந்தையுமாய்சொல்லுதற்கரிய உன்பாதத்திற்சேர்க்கும்-என்றவாறு. (சுக)

ஆனவரநல்குநதி யாயிரஞ்சென் றாடுகிலென்
றானம்பதினாறுந் தான்செயினென்-ஞானங்க
ளஞ்சுடையான்சோணகிரி யண்ணலைனையெண்ணாத
நெஞ்சுடையார்பூதலத்தே நின்று

இதன் பொருள்.

சத்தியோசாதனம் வாமனம்அகோரம் தற்புருஷம்ஈசானியம்என்னும்ஐந்துமுகத்தையுடைய அருணாசலக்கடவுளை பக்தியோடுதுதியாத நெஞ்சையுடையவர்கள் இப்பூவுலகின் கண்வேண்டியவரங்களைக்கொடுக்கும் கங்கையையொத்த ஆயிரநதிகளிற்சென்று ஸ்நானஞ்செய்தாலும் முப்பத்திரண்டு தருமங்களையும்வழுமாமல் நடத்தினாலும் பிரயோசனமென்னலொன்றுமில்லை-என்றவாறு. (சுஉ)

நின்றுதவம்புரியாய் நெஞ்சேதிருக்கோயில்
சென்றுசிவபூசையறஞ் செய்திடாய்-வென்றிதரு
மம்மான்கரத்த னருணேசனம்புயத்தாள்
சும்மாகிடைக்குமோ சொல்.

இதன் பொருள்.

அஞ்ஞானம் பொருந்திய என்மனமே நீ ஓரிடத்தில்நின்று தவமுஞ்செய்யாய் சிறப்புப் பொருந்திய ஆலயத்திற் சென்று பூசை செ

ய்துசிவதருமத்தையும் நடத்தாய் அப்படியிருக்க வெற்றியைக் கொடுக்கும் அழகியமானேக்கரத்திலேந்திய அருணசலக்கடவுளது தாமரைமலரையொத்தபாதம் சும்மாகிடைக்குமோ சொல்வாய்-என்றவாறு. (சுங)

சும்மாகிடைக்குமோ சோணசலன்பாத
மம்மால்விரிஞ்சனறிகிலர்-நம்மா
லிருந்துகதைசொன்னக்கா லென்னதுநெஞ்சே
பொருந்தநிலையாத போது.

இதன்பொருள்.

மனமேபலஆசையைநீக்கிஒருநிலையில்நின்று துதிக்காமல் அருணசலக்கடவுளதுதிருப்பாதம் சும்மாகிடைக்குமோ அந்தபிரமாவும் விஷ்ணுவும் அனேககாலந்தேடியும்அறியார் நாம் கிடைக்குமென்று செருக்கினல் கதைசொல்லுவதால் என்னபிரயோசனம்-என்றவாறு. (சுச)

போதையிருபல்லுகுத்துப் புண்டரிகன்றேவியெனு
மாதையன்றுமூக்கறிந்த மாவீரன்-றாதை
விருப்பாமதிசூடி வெண்டலையோடேந்தி
யிருப்பானருணேசனின்று.

இதன் பொருள்.

தக்கனுடையயாகத்தில் சூரியனுக்கு இரண்டுபல்லுதிர்ந்தும் புண்டரீகமென்னுந் தாமரைமலரிலுதித்த பிர்மாவின் தேவியாகிய சரஸ்வதியைமூக்கையரிந்தும் பேர்பெற்ற வீரபத்திரரது தந்தையாகிய அருணசலக்கடவுள்விருப்பத்துடன் இளஞ்சந்திரனைச் சடையிற்றரித்தும்பிர்மகபாலத்தைக்கையிலேந்தியும், இருப்பர்-என்றவாறு. (சுரு)

இன்றைக்குநாளைக் கிரவிற்கெனுந்துயர
மென்றைக்குப்போமருணை யீசனே-கொன்றைமதி
புன்னையெருக்கும் புனையுஞ்சடாடவியா
யென்னைநெருக்கு மிவை.

இதன்பொருள்.

அருணசலக்கடவுளே கொன்றை மாலையையும், பின்னைமாலையையும், எருக்கமாலையையும், சந்திரனையும், சடாமகுடத்திற் றரித்தவரே

இன்றைக்குவேண்டும் இராத்திரிக்குவேண்டும் நாளைக்குவேண்டும்என்னும் சமுசாரதுக்கம் நெருங்காமல் என்னைவிட்டு என்றைக்கு நீங்கும்-என்றவாறு. (சுசு)

நெருக்குமிவைஎன்னுயிரை நீங்காமற்சூழ்ந்தே
யிருக்கும்பலபிணிகோ யெல்லா-முருக்கும்வகை
கண்டேனருணேசன் கஞ்சமலர்த்தாள்கருத்திற்
கொண்டேனெனக்கென் குறை.

இதன்பொருள்.

என்னைவருத்தும்வினையையும் என்னுயிரைவிட்டு நீங்காமல் சூழ்ந்திருக்கும் கொடியவியாதிகளையும் அகற்றும் வகையறிந்தேன் அருணசலக்கடவுளது பாதாரவிந்தத்தைக் கருத்திற்கொண்டேன் இனி எனக்கென்னகுறை-என்றவாறு. (சுஎ)

குறையேதுமில்லைஇனிக் கூறுங்கால்வானோர்க்
கிறையாகுஞ்சோணேசற் கென்று-மறைபுகுந்தேம்
பற்றிநமைத்தொடரான் பார்க்குங்காலெனெஞ்சமே
வெற்றிநமன்கைத்தலத்து வேல்.

இதன்பொருள்.

மூடத்துவம்பொருந்தியமனமே சொல்லுமிடத்தில்நமக்குபாதொருகுறைவுமில்லை தேவர்களுக்குதேவனாகிய அருணசலக் கடவுளுக்கென்றுசரீரத்தை நியமித்துச்சரணமடைந்தோம் இயமதருமன் நம்மைப் பற்றிநெருங்கான் நெருங்கில்அவன்கரத்திலிருக்கும் சூலாயுதத்தையுஞ் செயித்தோம் என்றவாறு. (சு அ)

வேலைவிடமுண்ட விமலசருணேசர்கொன்றை
மாலையணிமார்பர் மலர்பதத்தை மேல்மார்
பண்ணினார்பூசையறப் பண்ணிப்பரகதியி
னண்ணினாரெல்லா நலம்.

இதன்பொருள்.

திருப்பாற்கடலிலுதித்த விஷத்தை யுண்டவரும் கொன்றைமாலையைத்தரித்த மார்பையுடையவருமாகிய அருணசலக்கடவுளது பாதாரவிந்தங்களைப்பூசைசெய்து தேவர்கள் முதலிய சகலரும் நற்கதி யடைந்தார்கள்-என்றவாறு. (சுசு)

✓ எல்லார்பிறப்பு மிறப்புமியற்பாவலர்தஞ்
சொல்லாற்றெளிந்தெநஞ் சோணேச-ரில்லிற்
பிறந்தகதையுங்கேளேம் பேருலகில்வாழ்ந்துண்
டிறந்தகதையுங்கேட்டி லேம்.

இதன் பொருள்.

உலகத்தின்க ணுள்ளவருடைய பிறப்பும் இறப்பும் இயலிசையெ ன்னும் இலட்சணங்களையறிந்த வித்துவான்கள்சொல்லிய ஆகமசாஸ்தி ரங்களினால் அறிந்தோம் நமது அருணாசலக்கடவுள் ஒருவர்வீட்டிற்பிற ந்தாரென்கிற கதையுங்கேட்டிலோம் பிறந்துசீவித்துக்கொண்டிருந்துஇ றந்தாரென்னுங் கதையுங்கேட்டிலோம்-என்றவாறு. (௭௰)

ஏமாந்தசோணகிரி யீசரடியாரடிக்கே
பூமாமலர்தூவிப் போற்றுதார்-தாமென்றும்
வெஞ்சமனத்திற்கும் வேடராய்நாடோறும்
வஞ்சநமனுக்கஞ்ச வார்.

இதன்பொருள்,

ஒய்யாரத்துடனே திருவண்ணாமலையிலமர்ந்த ஈஸ்பரரது அடியா ர்களுடைய பாததாமரைகளில் நல்லபுட்பங்களைச்சாற்றித் துதித்துநற்க தியடையாதவர் எப்போதும்கொடியமனத்துடன் ஊனைத்தின்று ஊனை ப்பெருக்கியவேடராய் வஞ்சனையுடைய இயமனுக்குத் தினந்தினம் பய ப்படுவார்-என்றவாறு (௭௧)

வஞ்சநமனுக்கஞ்சி வாடுந்தமியேனை
யஞ்சலென்றசோணகிரி யண்ணலே-நெஞ்சரிய
வாண்டகுருநீயென் றறியாதார்செய்ததவ
மாண்டமரத்திற்கணைத்த மண்.

இதன்பொருள்.

வஞ்சகனாகியஇயமனுக்குப்பயந்து சோர்வடையும் எளியேனைபய ப்படாதேயென்று அபயாஸ்தங்கொடுத்த அருணாசலக்கடவுளே மனம றியஇரட்சிக்குங்குரு தேவரீரென்றறியாதவர்கள் செய்ததவமானது பட் டுப்போனமரத்திற்குஅணைத்தமண்போல் வியர்த்தமாம்-என்றவாறு.()

மண்ணிற்பிறந்திருந்து மாயுந்தெய்வங்களோ
டெண்ணப்படாவருணை யீசனே-விண்ணப்ப
மொன்றுண்டடியே னுனைப்பிரியாதேயிருக்க
வென்றுதருவா யெனக்கு.

இதன்பொருள்.

இப்பூவுலகின்கண் பிறந்து இறந்துபோம் தெய்வங்களுக்குச் சம மாகஎண்ணப்படாத அருணாசலக்கடவுளே ஒருவிண்ணப்பமுண்டு அ தென்னெனில் அடியேன்தேவரீரது பாதாரவிந்தங்களை விட்டு நீங்காம லிருக்கவரந்தருவீர்-என்றவாறு. (எ௬)

தருவாயெனக்குகந்துன் றன்னிருதாடன்னை
மருவார்புரமெரித்த மன்னு-குருவாகி
முன்னைவினையகற்றி மூர்த்தியருணேச
வென்னைப்பொருளா வெடுத்து.

இதன்பொருள்.

அருணாசலத்தில்வசிக்குங்கர்த்தனேஎன்பேரில்ஆசைவைத்துவரந் தருவீர்உமதுஇரண்டுபாதங்களையும்வணங்கித் துதியாததிரிபுரத்தாரை எரித்ததேவனே தேவரீர்குருவாகவந்து யான்பூர்வத்திற்செய்த கொடிய வினைகளையகற்றி என்னைஒருபொருளாகமதித்து இரட்சியும் எ-று. ()

எடுப்பானுங் காப்பானு வேற்பானு மேற்பக்
கொடுப்பானு மேதுங் கொடானும்-விடப்பானம்
பண்ணியநேகர் பயங்கெடுத்தசோணகிரி
புண்ணியனேநீகாணிப் போது.

இதன்பொருள்.

அடியார்கள் ஒருபொருளாகமதித்து சிருஷ்டிக்கிறவனும்நீயேசிரு ஷ்டித்துஇரட்சிக்கிறவனும்நீயே ஒருவரிடத்திற்போ யாசிக்கச்செய்கிற வனும்நீயே யாசிக்கிரவனுக்குக்கொடுப்பவனும்நீயேலோபத்தனமாய்ஒ ன்றுங்கொடாதவனும்நீயேவிஷத்தைப்புசித்துஅனேகம்பேருடையபய த்தைக்கெடுத்துஇரட்சித்தஅருணாசலக்கடவுளே புண்ணியஸ்வரூபனே எல்லாவிஷயங்களுக்குங்காரணம் இப்போதுதேவரீர்தான்-எ-று. (எஅ)

இப்போதுபின்னைக் கில்லையென்றிரப்போரை
எப்போதுந்தள்ளா திரங்கியே-முப்போதும்

பூசிப்பதென்னுள் புனிதனேசோணகிரி
நேசிப்பதென்னு ணினைந்து.

இதன்பொருள்.

இப்போதைக்கில்லை பின்னைக்கில்லை யென்றுயாசிப்பவர்களை எப்போதும்நீக்காமல் மனதிரங்கிஇரட்சிக்கும் அருணசலக்கடவுளே தேவரீரைஅடியேன் மூன்றுகாலங்களும்விடாமல் பூசைசெய்வதெந்நாள் பக்தியுடனேநினைந்து சிநேகிப்பதெந்நாள்-என்றவாறு. (எசு)

நினையென்றிருக்கோயி னின்றுகண்ணீர்சோர
நனையேன்பிறப்பறுக்க நாடேன்-புனையேனின்
பொன்னடிக்குப்பூமாலை போற்றியருணேச
பின்னடிக்கிங்காருதவும் பேர்.

இதன்பொருள்.

தபோதனர்கள்துதிக்கும் அருணசலக்கடவுளே புல்லறிவனுகியயான்உம்மைநினையேன் தேவரீரது ஆலயத்திற்குவந்துநின்றுஇரண்டுகண்களிலும்ஜலம்பெருக அதனால்நனையேன் பிறப்பென்னும் வலையைஅறுக்கவும்நாடேன் உமதுபொன்போன்றபாதங்களுக்கும் புட்பமாலைசாற்றித்தோத்திரஞ்செய்யேன் இவ்விதமௌடீகபுத்தியையுடையஎனக்குஇரக்குங்காலத்தில் உதவிசெய்பவர்கள்யார்-என்றவாறு. (எஎ)

பேராயிரமுடைய பெம்மானைச்சோணகிரி
யாராவமுதை யறியாமல்-வாராது
தீதுநலமுந் தெரியுங்காணெஞ்சமே
யேதுமவனென்றே யிரு.

இதன்பொருள்.

ஆயிரநாமத்தையுடைய அருணசலக்கடவுளை தெவிட்டாதஅமுர்தத்துக்கொப்பானவரை யறியாமல்நன்மையும்துன்மையும்உண்டாகாது நெஞ்சேசகலமும் அவரென்றே எண்ணியிருப்பாய்-என்றவாறு.(எஅ)

இருந்துநினைப்பார்க ளிருவினையைநீக்கும்
பொருந்துமிடியிம்மையிலே போக்கு மருந்தன்றே
தம்பிரானெவ்வுயிர்க்குந் தானுவருணகிரி
யெம்பிரானேரஞ் செழுத்து.

இதன்பொருள்

மவுனமாகநின்று செபிப்பவர்களுடைய நல்வினை தீவினை யென்னு மிரண்டையும் நீக்கும் இப்பிறப்பிற் பொருந்திய தரித்திரத்தைப்போக்கு ம் மருந்தல்லவோ சகலசீவ செந்துக்களுக்கும் கர்த்தனாகியஅருணாசல க்கடவுளதுபஞ்சாட்சரமென்னும்ஐந்தெழுத்து-என்றவாறு. (எகூ)

அஞ்செழுத்தை யோதுமவர்க்கஞ்சியவர்தலையிற்
றஞ்செழுத்தைக் கஞ்சன் றுடைக்குமே-யஞ்சுதலைக்
கொன்றறுத்து நாலாவொருகுறையா நின்றதலை
யின்றறுப்பான் சோணேச னென்று.

இதன்பொருள்.

தாமரைமலரிலுதித்த பிரமதேவன் ஐந்தெழுத்தென்னும் பஞ்சா ட்சரத்தைச்செபிப்பவர்களுக்குப்பயந்து அவர்தலையிலெழுதியஇறப்பெ ழுத்தைக் கலைத்துவிடுவன் அதேனெனில்நமக்கு மைந்துதலைஈஸ்பரரு க்கு மைந்துதலையென்று கர்வங்கொண்டதால்கோபித்து முன்னிருந்தஐ ந்துசிரசில் ஒருசிரசையறுத்த அருணாசலக்கடவுள்இப்போதிருக்குமநா ன்குசிரசையும்இன்றைக்கறுத்தெறி வாரென்றுநினைத்து-என்றவாறு. )

என்றுநமன்றூதுவரை யேற்கவேதானழைத்து
நின்றுரைகுஞ்சோணகிரி நித்தனார்-கின்றடிமை
யானவர்க்குநீவணங்கி யப்பாலேபோமென்று
தானவர்க்குப்புத்தியாத்தான்.

இதன்பொருள்.

எப்போதும் இயமதருமராசன்தனது தூதுவர்களையழைத்துஎதி ர்நின்று அருணாசலக்கடவுளுக்கு அடிமையானவர்களைக் கண்டாஸ்நீங்க ள்அவர்களைவணங்கித்துதிசெய்து அப்பாற்போங்களென்றுபுத்திவரும் படிசொல்வன்-என்றவாறு. (அக)

பத்திதருஞ்சோணேசன் பொன்னடியைவாழ்த்துனர்க்குப்
பத்திதருமெய்ஞ்ஞானம் பாலிக்கு-முத்திதரு
மாற்றரியதீவினையை மாற்றுவிக்குமைந்தெழுத்தைப்
போற்றரியநெஞ்சமே பூண்டு

இதன்பொருள்.

அருணாசலக்கடவுளது பொன்போன்ற பாதங்களைத்துதிப்பவர் களுக்குநல்லபுத்தியும் தெய்வபத்தியும் மெய்ஞ்ஞானமும்

...ாட்சமுங்கொடுக்கும் வெல்லுதற்கரியதீவினையைநீக்கும் ஆகையால் ...தித்து நற்கதியடைதற் கரியாத எனது நெஞ்சமே பஞ்சாட்சரத்தை ...றவாமற்செபித்து தோத்திரஞ்செய்வாய்-என்றவாறு. (அ௨)

பூண்டவகைக்கெல்லாம் பொருந்துமணிமுத்திருக்க
வேண்டும்பசும்பொன் விளைவிருக்கத்-தீண்டாமற்
பொங்கரவுந்தோலெலும்பு பூண்டாயிதென்னருணைச்
சங்கராகங்கா தரா.

இதன்பொருள்.

ஆபரணமாக அணிவதற்கிசைந்தரத்தினங்களும் முத்துகளும் அ...ற்குவேண்டிய பசுமைபொருந்திய பொன்விளைவு மிருக்க அவைகளை ...ணியாமல் விஷத்தையுடையபாம்பும் புலித்தோலும் எலும்பும்ஆபரணமாகத்தரித்தாய் இதென்னதிருவண்ணமலையில் வசிக்குங் கர்த்தனே க...ங்கையைச் சடாமகுடத்திற்றரித்தவனே சொல்வீர்-என்றவாறு.(அ௩)

கங்காதரனே கடையேனையெந்நாள்
ளங்காதரவா வழைக்குநா-ணங்காதல்
பார்க்குநாள்சோணேச பார்த்துப்பரகதியிற்
சேர்க்குநாளெந்நாள் செப்பு.

இதன்பொருள்.

அருணசலக்கடவுளே கங்காதரனே கடையேனாகிய என்னை ஆதரவோடுஅழைத்து உமதுபாதத்திற்சேர்க்குநாள் எந்நாள் என்னுடைய விருப்பத்தையறிந்து பரகதியென்னு மோட்சத்தையடைவிக்குநாள்எந்நாள்சொல்வீர்-என்றவாறு. (அ௪)

செப்பரியவாணவத்தைச் சேதமுறமும்மலத்தை
யொப்பிலாச்சஞ்சிதத்தை யோட்டினே-னிப்போ
தருவாகிநின்ற வருணகிரியானைக்
குருவாகவென்னுளத்தே கொண்டு.

௫

### இதன்பொருள்.

சொல்லுதற்கரிய ஆணவம்மாயை காமிய மென்னு மும்மலத்தையும்இணையில்லாத சஞ்சிதத்தையும் இப்போது என்னைவிட்டுநீக்கினேன்அதெப்படியெனில் அருவுருவாசயிருக்கும்அருணாசலக்கடவுளை குருவாகஎனதுநெஞ்சத்திற்கொண்டே-என்றவாறு. (அரு)

கொண்டநெறிசற்றுங் குலையார்மனத்திருக்கு
மண்டர்கோவேயருணை யண்ணலே-தொண்டர்க்
கிடையாதுநெஞ்ச மிருவினையாலென்று
மடையாதெழுபிறப்பா மல்.

### இதன் பொருள்.

தாங்கள்கொண்டநெறிமுறை கிஞ்சிற்றுகெடாத அடியார்களது மனதில்நிலைத்திருக்கும் தேவதேவனே அண்ணாமலைக்கிறைவனே உமது அடியார்களுக்கு புத்திகெடாது நல்வினை தீவினையென்னு மிருவினையால்எழுவகைத்தோற்றமென்னுந் துன்பத்திற்கிடமாகிய பிறப்பு எப்போதும்அணுகாது என்றவாறு. (அசு)

அல்லதொருதெய்வ மறியேனறிந்தாலு
நல்லதென்றுநெஞ்சகத்தி னுடேன்யான்-சொல்லரிய
வண்ணாமலைமேவு மண்ணலையுமண்ணலிடத்
துண்ணாமுலையாளை யும்.

### இதன்பொருள்.

சொல்லுதற்கரிய அண்ணாமலையில்வசிக்கும்கர்த்தனையும் அவரது இடப்பாகத்திலமர்ந்த உண்ணாமுலையம்மையையும் அல்லாமல் வேறேயொருதெய்வத்தைஅறியேன் அப்படியறிந்தாலும் இதுமோட்சத்தைக் கொடுக்கும்நல்லதெய்வமென்று இருதயத்தில்நினையேன்-என்றவாறு.()

உம்மைநினைந்தே யுருகியருணேசர்
தம்மைநினைந்தார் தமக்கெல்லா-மிம்மையிலே
யெல்லாருங்காண வெளிதோபுவிமீதி
னல்லார்துதிக்கு நடம்.

இதன்பொருள்,

மூவாசையையொழித்த ஞானவான்கள்துதிக்கும் அருணாசலக்கடவுளே உம்மைஉண்மையாகநினைந்து மனமுருகித்தோத்திரஞ்செய்பவர்களுக்கல்லாமல் இப்பிறப்பில் மற்றயாவருங்கண்டு தெரிசிக்கஅரிதாகும் இப்பூவுலகின்கண் நல்லபெரியோர்களால் கண்டுதோத்திரஞ்செய்யும் நடனம்-என்றவாறு. (அஅ)

நடலையறுத்தாளருணை நம்பனுக்கன்பில்லா
ருடலையொறுப்பதாலாவ துண்டோ-வடலைநூ
லோதினற்பாச மொழியுமோர்புற்றிலே
மோதினற்பாம்புசா மோ.

இதன்பொருள்.

நடலையென்னும் பிறப்பையறுத்து இரட்சிக்கும் அருணாசலக்கடவுளிடத்தில் அன்பில்லாதவர்கள் செபதபங்களில் உடலைவருத்தினதால் ஆவதொன்றுண்டோ வேதசாஸ்திரங்களை வாசித்ததினால்ஆசாபாசமென்னும் கர்மங்கள் தம்மைவிட்டு நீங்குமோ நீங்காது அப்படியெனில்புற்றைத்தடிகொண்டடித்தால்அதனுள்ளிருக்கும்பாம்பு இறந்துபோமோ இறவாமலுள்ளிருத்தல்போல் அவர்கள்பாபகர்மங்களும்நீங்காது எ-று.

ஈஸ்வரபக்தி யில்லாதவர்கள்செய்யும விரதம் விருதாவாம் என்பதாம்.

மோகமறேன்சோணகிரி மூர்த்தியேமும்மலத்தின்
ஞாகமற்றேனின்பெருமை தானறியேன்-காகநாய்
தம்மதென்னுங்காயத்தைத் தானெடுத்துத்தாரணியி
னம்மதென்னுங்கண்டாய் நரி.

இதன்பொருள்,

அருணாசலக்கடவுளே புல்லனாகிய யான்மோகமென்னும்ஆசையை நீக்கேன் ஆணவம்மாயை-காமியமென்னும் மும்மலத்தினாலுண்டாகியவிருப்பத்தையும்அகற்றேன் உமதுபெருமை யிப்படிப் பட்டதென்றுமறியேன் மானிடசரீரத்தைப்பெற்றும் காக்கை-நாய் நரி முதலியவைகள் தங்களுக்கிரையென்றுநினைந்துகொள்வதற்கல்லாமல்இச்சரீரத்தால்வேறு பிரயோசனங் காணேன்-என்றவாறு, (௬௰)

நரிக்குப்பொதிசோறு நான்சுமந்துநொந்தே
நரிக்குமரிதா மரனே-தெரிக்குமறை
காணுதசோணகிரிக் கண்ணுதலேநின்பதத்தைப்
பேணுதகாயேன் பிறந்து.

இதன்பொருள்.

மகாவிஷ்ணுவாற் காணுதற்கரிய ஈசனேநான்குவேதங்களாலும் அறியப்படாத அருணசலக்கடவுளேநெற்றிக்கண்ணுடையவனேஉமது பாதாரவிந்தத்தைநினைந்து தோத்திரஞ்செய்யாதஅடியேன்இச்சரீரமெடுத்தும் தரிசிப்பதற்குக் கட்டுச்சோறெனசுமந்து துன்பப்பட்டேன்- ஏ-று

பிறந்திறக்குந்தெய்வப் பிணங்களைக்கொண்டாடே
னறத்தழைக்குஞ்சோணகிரியானே-பிறந்திறவா
வும்மைப்புகழ்ந்தே யுமக்கடிமையானபேர்
தம்மைப்புகழ்வதல்லாற் றான்,

இதன்பொருள்,

தருமமேமிகுதியாய்த் தழைத்ததிருவண்ணமலையில் வசிக்குங்கர்த்தனேபிறப்பிறப்பில்லாததேவரீரைத் தோத்திரஞ்செய்துஉமக்கடிமையான பக்தர்களைத்துதிப்பதல்லாமல் பிறந்துபிறந்திறக்குந்தெய்வமென்னும் பிணங்களைக்கொண்டாடித்தோத்திரஞ்செய்யேன்-என்றவாறு ()

தானவர்கண்முப்புறத்தைத் தானெரித்துநஞ்சுகந்தீர்
வானவர்க்காச்சோணகிரி வள்ளலே-யேனம்
விருப்பாமலர்சூடி வேண்டினனீண்ட
நெருப்பாவிருந்ததென்ன நீர்.

இதன்பொருள்.

சதுர்யுகத்திலும் அழியாதஅருணசலக்கடவுளேமுப்புராதிகளான இராட்சசரது உபத்திரவத்தினலும்-சமுத்திரத்திலுதித்தவிஷத்தின

கொரேத்திறலும்பயந்து துதித்ததேவர்களுக்காக அந்தராட்சசர்களுடனே முப்புரத்தையெரித்தும்கடலிலெழுந்தவிஷத்தைப்புசித்துப் அவர்களைஇரட்சித்தீர்-மகாவிஷ்ணுவானவர் பன்றியாகிதேவரீரது பாதாரவிந்தங்களைககாண ஆசையோடுபூமியைத்துளைத்துக்கொண்டுசென்றும்அவருக்குப்புலப்படாமம் நெருங்குதற்கரிய அக்கினிமலையாயிருந்ததென்னசொல்விர்-என்றவாறு. (கூக)

நீராழிநஞ்சுகந்த நித்தனேசோணகிரி

யாராவமுதேயென் னையனே-பாராளுந்

தாதையேபூசையறந் தானறியாமற்றிரியும்

பேதையேற்காராவார் பின்,

இதன்பொருள்,

சமுத்திரத்திலே பிறந்தவிஷத்தையுண்டபிறப்பிறப்பில்லாதவனே திருவண்ணமலையில்வசிக்கும்தெவிட்டாத அமுர்தமே என்னையனேசகலபுவனங்களிலுமுள்ள சராசரங்களை இரட்சிக்குந் தந்தையேஉம்மைப் பூசிக்குநெறியும் தர்மமும் அறியாமல்திரியும் அறிவில்லாதவனாகியஅடியேனுக்குஉம்மையல்லாமல் ஆதரவுயார்-என்றவாறு. (கூச)

பின்னையொருவரில்லை பேருலகிற்றஞ்சமா

வன்னந்தருமருணை யையரோ-யென்னை

யெடுப்பதற்குங்காப்பதற்கு மென்பிறவிநோயைக்

கெடுப்பதற்குநீரே கெடீர்.

இதன்பொருள்,

சகலசீவாத்துமாக்களுக்கும் அன்னங்கொடுத்திரட்சிக்கும்அருணசலக்கடவுளே என்னைஒருபொருளாகநினைத்து சிருஷ்டிப்பதற்கும் சிருஷ்டித்து இரட்சிப்பதற்கும் எனதுபிறப்பென்னும்கொடியநோயைக்கெடுப்பதற்கும் அழிவில்லாத நீரேயல்லாமல்இவ்வுலகில்தஞ்சமென்றடைந்தஎன்னைஇரட்சிப்பதற்கு வேறொருதெய்வமில்லை-என்றவாறு. (கூரு)

ழ்கொண்டவேணி நிமலாவென்னீள்பிறப்பை

யார்தொலைப்பார்நீயல்லாதாயுங்காற் பார்மீதிற்

பொய்யாவரங்கொடுக்கும் புண்ணியனேசோணகிரி

யையாகருணாலயா.

இதன்பொருள்.

கங்காதேவியை சடாமகுடத்திற்றரித்த சோதிஸ்வரூபனே அழியா தவரத்தைக்கொடுக்கும் புண்ணியனே அருணாசலக்கடவுளே அன்பரது மனதை ஆலயமாகக்கொண்டவனே பார்க்குமிடத்தில் எனதுஅளவில்லாதபிறப்பிறப்பைஅழிக்கவல்லவர்நீயேயல்லாமல் இப்பூலகில்யார்-எ-று

கருணாலயாநின் கழல்பணியமாட்டே

னருணாசலாவென் றழையேன்-மரணாந்த

காலத்திலோதுங் கருத்தறியேன்கண்ணேயுன்றன்

கோலத்தில்லையேன் குறித்து. (௬௭)

இதன்பொருள்,

கிருபைக்கடலானஐயனே உமதுபாதாரவிந்தங்களைவணங்கித்தோத்திரமுஞ்செய்யேன் அருணாசலக்கடவுளேயென்றும் அழையேன் மரணகாலத்திலும் உம்மைநினைத்துநற்கதியடையவும்வழியறியேன் எனதுகண்களைக்கொண்டும்தேவரீரதுஸ்வரூபத்தைப்பாரேன்-என்றவாறு. ()

குறியேனிருபதத்தைக் கூடும்வகைசற்

றறியேனறிந்தவர்க்கொன் றுற்றேன்-சிறியேனின்

றுயுமறைதேடரிய வண்ணாமலையானே

மாயுமிருந்தையா மனம்,

இதன்பொருள்,

நான்குவேதங்களுந் தேடுதற்கரிய அருணாசலக்கடவுளேசிறியனாகியயான் தேவரீரைத்துதித்து உமதுபாதாரவிந்தங்களை அடையும்வகை கின்சிற்றுமறியேன் அறிந்த புண்ணியவான்களுக்குமொருஉபகாரஞ்செய்யேன்என்மனமானதுசும்மாயிருந்தலைச்சல்பட்டு இறந்துபோம் -எ-று,

ஐயாமரப்பாவை யாடுவதுஞ்சூத்திரிதன்
கைவாசியோபாவை கற்றதோ-வெய்யவினை
யென்னிச்சையோவருணை யீசாபடைத்தளிக்கு
முன்னிச்சையன்றோ வுரை.

இதன் பொருள்,

என்னையனே மரத்தினாற்செய்த பதுமை நடிப்பது ஆட்டிவைக்கு ஞ்சூஸ்திரக்காரனது கைப்பழக்கத்தினாலோ அல்லது அந்தப்பதுமைந டிக்கக்கற்றதோ பார்க்குமிடத்தில் சூஸ்திரக்காரனால் பதுமை நடிப்பது ாற்கொடியவினைகள் என்னிச்சையாற்செய்ததோ அருணாசலக்கடவு ளே சீவசெந்துக்களைசிருஷ்டித்து இரட்சிக்கும் தேவரீரிச்சையாற்செய் வதல்லவோசொல்லும்-என்றவாறு. (௯௯)

உரைக்குமடியா ருயிர்ப்பயிர்வாடாமற்
றரைக்குளானந்தவெள்ளந் தன்னை-நிரைக்குமே
யெண்ணார்புரமெரித்த வெந்தையருணகிரிக்
கண்ணாரமுதமெனுங் கார்.

இதன்பொருள்.

மதியாதவர்களது முப்புரத்தையெரித்த என் ஐயனாகிய அருணாச லக்கடவுளது கிருபர்நோக்கமென்னுமேகம் தமதுமகிமையை பக்தியுட னேதுதிக்கும் அடியாரதுஉயிரென்னும்பயிர் வாட்டமடையாமல் இப்பூ மியில் ஆனந்தமென்னும் வெள்ளத்தைநிறப்பும்-என்றவாறு. (௮)

---

அருணகிரியந்தாதி யழகுவெண்பாநூறும்
கருணையுடன்கற்றோரைக் கண்டு-அருணையண்ணல்
வீறுணபொன்னுலகின் வேந்தனுக்குமாற்றாக
மாறுமல்வைப்பார் மகிழ்ந்து.

இதன்பொருள்.

அருணகிரியந்தாதி யென்னும் அழகு பொருந்திய மலைமாலையாநூலையும் பத்தியோடு வாசிப்பவர்களைப்பார்த்து அருணாசலக்கடவுள் சந்தோஷித்து மேன்மைபொருந்திய தேவலோகத்தை யாளும் தேவேந்திரனுக்குச் சமமாக தேவலோகத்தில் எப்போதும் நீங்காமல்வைப்பார்-என்றவாறு. ()

மல்லிகார்ச்சுனத்திலிருந்து தெற்கே சிவஸ்தலயாத்திரைசெய்துவருகிறேனென்று தமதுகுருவினனுமதி பெற்றுக்கொண்டு சஞ்சரிக்கும்போது தமதுகுருவாயெழுந்தருளிய அண்ணமலையார்சொற்படி திருவண்ணமலையிலே குகையினிடத்து மகிமையுட னிருந்த கன்னடமூர்த்தியாகிய குகைநமசிவாயதேவர் அவ்வண்ணமலையார் வரப்பிரசாதத்தினலே அவரைத்தோத்திரஞ்செய்த அருணகிரியந்தாதி.

மூலமும்-உரையும்.

முற்றுப்பெற்றது.

மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.



